வார் வினைவளை நீறெழு' என்றுந் திருவள்ளுவரினுந் திருக்கோவையாரினும் பரிமேலழகரும் பேராசிரியரும் தொழாநின்றெழுவான் தொழாநின்றெழுவார் எனத் துணைவினையாயுரைப்பர். எழுதல் துயிலொழிதலாகலின், எழுந்து தொழுவானென முன்பின்னாகப் பொருள்படுதலன்றி, கருப்புவர்தான் ஓடிவர்தான் என்பன போலத் தொழாநின்று துயிலொழிதல் கூடாமையுணர்க. “வைகறை யாமந் துயிலெழுந்து தான்செய்யு—நல்லறமு மொண்பொருளுஞ் சிந்தித்து வாய்வதிற்—றந்தையுந் தாயுந் தொழுதெழுக” என்பது துயிலொழிந்து பின் தந்தையுந்தாயுந்தொழுது பின் காரியத்திற் செல்கவெனப் பொருள்பட்டு வருதலானும், அவ்வுரை அசம்பாவிதமென்க.

'மோயின நெகிழ்த்த காலை' என முற்றாய்த் திரிந்தது. 'நறப்பா டலம்புனை வார்பினைவார்' 'கலைத்தொழில் படவெழுதிப் பாடினன்கனிர் சிலைப்பொழில் குரங்கின ஈன்ற துண்டளிர்' 'கானவ ரிரிய வில்வாய்க் கடுங்கணை தொடுத்த வேடு மானிரை பெயர்த்த வாய ரார்த்தன ரணிக்க திண்டோ—டாவென்ற முடவிகிற் றென்று சிலிர்த்தது சரம்பெய் மாரி—போலின்ற வென்ப மற்றப் பொருவருந் சிலையினுந்தே.' 'செய்யோன் செழும்பொற் சாரஞ்சென்றது சென்றதாலி' 'அவிழ்ந்தன தோன்றி யலர்ந்தன காயா—நெகிழ்ந்தன சேரிதும் முல்லை மகிழ்ந்திதம்—விண்டன கொன்றை விரிந்த கருவிளை கொண்டன காந்தள் குலை' 'சோலை பயிலுங் குயின்மழலை சோர்ந்த சைந்த வானூ மயிலினங்க ளார்த்தெழுந்த—வாலங் குளிர்த்த முகில்கறுத்த கோபஞ் சிவந்த—விளர்த்த துணைபிரிந்தார் மெய்' இவையெல்லாஞ் செயவெனெச்சம் முற்றாய்த்திரிந்தது. இவ்வாறுவரு முற்றுக்களை முற்றாகவே பொருளுரைக்கில் ஏகவாக்கியமாகாது பின்னவாக்கியமாகிப் பொருள் சித்தியாதென்க.

'கோழிகூவிப் போது புலர்ந்தது' 'உரற்கா லியானை யொடித்துண் டெஞ்சிய யாமரம்' என்புழிக் கூவப் போது புலர்ந்தது உண்ண வெஞ்சிய யாமரம் எனத் தமிழ்நூலார் பொருளுரைத்துச் செயவெனெச்சம் செய்தெனத் திரிந்ததென்றும், “வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய” “அம்முக் கிளவி” என்னும் இரண்டு சூத்திரத்தால் சேனாவரையர் நச்சினார்க்கினியார் செய்தெனெச்சம் சமானகர்த்திருகமன்றிப் பின்னகர்த்திருகமாகவும் வருமென்றுங் கூறுவர். இவற்றை வடநூலார் கூவிவித்து எஞ்சுவித்து என அந்தர்ப்பாவிதணிச்சாக்கிக் கூறுவர். கோழியைக் கூவிவித்தற்கும்

யாமத்தை எஞ்சுவித்தற்கும் காலமும் யானையும் ஏதுவாதலிற் சம்பாவிதமாம். 'குடிபொன்றிக் குற்றமு மாங்கே தரும்' என்புழிக் குடிபொன்றலிற்றென்னும் பொருள்விளங்கக் குடிபொன்றச் செய்தென வுரைப்பர் பரிமேலழகரும். இனி ஞாயிறு பட்டுவந்தான் சாத்தன் என்றால், ஞாயிற்றைப் படுவித்தற்குச் சாத்தன் ஏதுவாகாமையின், அஃதசம்பாவிதமாம். ஆதலின், ஞாயிறுபட எனத்துமுணர்த்தமாக்குவர். நன்னூலார் எச்சத்திரிபுகளை "சொற்றிரி யினும் பொரு டிரியா வினைக்குறை" என்று சத்தவிகாரமாக்குவர்.

உண்டுவந்தான் சாத்தன் இது சமானகர்த்திருகம். துவாதி மூன்றும் இவ்வாறே வரும். சாத்தனுண்ணவந்தான், சாத்தனுண்ணக் கொற்றன் சோறுகொடுத்தான் எனத் துமுன் சமானகர்த்தாவோடும் பின்னகர்த்தாவோடும் வரும். செயின் செய்தால் எனக் கூறும் அவ்வியய கிருத்துக்களும் இருவர் வினையுங்கொள்ளும்.

'கருநாய் கவர்ந்த காலினர் சிதைவிய பானையர்—பெருநாடு காணை விட்டையிலே பிச்சை தானுங் கொள்வர்' என்பதனை 'இரும்பார்க்குங் காலரா யேதிலார்க் காளாய்' 'சேனைத் தலைவராய்' என்னும் பாட்டுக்கள்போல ஆயென்னுஞ் சொல்கொடுத்து, விரவா வினையெச்சமாக்குவர். இவ்வினையெச்சங்களைக் கிரியாவிசேடணமென்பர். 'அரியானை யந்தணர்தஞ் சிந்தை யானை' என்னும் பாட்டினைக் கருமவிசேடணமென்பர். 'இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே' எ-ம். 'கூற்றுவனை மன்மதனை யரக்கர் கோவை' எ-ம். தொடர்ந்தும் தொடராதும் வருவதுமது. 'கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவான்.' 'அகல்விசும்பு ளார்கோமா—னிந்திரன்,' 'காலார் கழலார் கடுஞ்சிலையார்' என ஒருபொருண்மேற் பலபெயர் வந்து ஒருவினை கொள்வதனையும் இடைப்பிற வரலாய் நின்ற பெயரெச்சத்தையும் கர்த்திரு விசேடணமென்பர். இவ்வாறு பெயர்பலவடுக்கி ஒருபயனிலை கொள்வதனையும் வினை பலவடுக்கி ஒருபெயர் கொள்வதனையும் அகத்தியரும் நன்னூலாரும் "வினைத்துமுற் றடுக்கினும்" "உருபுபல வடுக்கினும் வினைவேறடுக்கினு—மொருதம் மெச்ச மீறுற முடியும்" என்னுஞ் சூத்திரங்களாலடக்குவர். 'பெண்ணேவல் செய்தொழுகு மாண்மை' 'மடலேறுப் பெண்ணிற் பெருந்தக்க தில்' என்பவற்றுள் ஒழுகுவாருண்மை மடலேறுதலன் பெண்மை எனப் பெயரெச்சங்கள் முற்றுப் பெயராயும், 'தோரான்பிறனில்புகல்' தோராத பிறன் என முற்றுப் பெயரெச்சமாயும், அருத்தவிகாரமாய்ப் பொருடிரிதன

கலுபீத்துவா என்னுந் துவாப்பிரத்தியயம் வேண்டா குடித்து வென நின்று, வேண்டாகுடிக்க எனப் பொருள்பட்டுத் துமுனர்த்தமா மென்பர். துமுன் துவாவாய்த்திரிந்த ஆதேசமென்றுந் துமுன் பொருளில்வந்த துவாவென்பர். (இ)

௪0. எடுத்தல் படுத்த னலிதலென் றுகு மிசையனைத்துந்
தொடுத்த வுதாத்த மநுதாத்த மேனைச் சுவரிதமா
படுத்த கிருதந்துள் முறமெல்லா மெடுத்தலருந் திஙந்தம்
படுத்த லிரண்டு முடைத்தாஞ் சரூபம படுதொடரே.

இது சரமென்னு மோசையும் அது வருமிடனுங் கூறுகின்றது. எடுத்தன் முதலாகிய மூன்றோசையும் உதாத்தம், அநுதாத்தம், சுவரிதம் என்னு மூன்று சரமாம். அவற்றுள், எடுத்தல் கிருத்துட் சரூபமான முற்றுப்பெயரோடும், படுத்தல் திஙந்தத்தோடும், அவ்விரண்டும் சொல்லாகப் பொருளாக வேறுபடுகிற சரூபச்சிவிட்டத்தோடும் வரும். எ - று.

'அடுத்த' என்றமையால் விலங்கலுங்கொள்க. 'பிரசயம் விலங்கல் பேசுங் காலே.' இஃதுரைச்சூத்திரம்.

எல்லாப்பொருளுமென்பது எப்பொருளுமென நின்றாற்போலச் சமானரூபம் சரூபமென நின்றது.

கிருத்துப் படுத்தல் திஙந்தம் எடுத்தலெனமாறிக் கூறுவாருமுளர்.

உ-ம். 'நெறிநின்றார் நீடுவாழ் வார்' 'மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்—நிலமிசை நீடுவாழ் வார்' என்புழி நெறிநின்றார் சேர்ந்தார் என்னுங் கிருத்தை உதாத்தமாக எடுத்துச்சரிக்க. வாழ்வார் என்னுந் திஙந்தமாகிய ஆற்பனேபதத்தை அநுதாத்தமாகப் படுத்துச்சரிக்க.

சொல் வேறுபடாது பொருள் வேறுபட்ட சரூபச்சிவிட்டமும், பொருள் வேறுபடாது சொல் வேறுபட்ட சரூபச்சிவிட்டமும், சொல்லும் பொருளும் வேறுபட்ட சரூபச்சிவிட்டமுமெனச் சரூபச்சிவிட்டம் மூவகைப்படும்.

உ-ம். 'குழல்வளர் முல்லையிற் கோவலர் தம்மொடு—மழலைத் தும்பி வாய்வைத்தூத' 'சிந்தைகலி கின்றநிரு நீர்க்குமரி யாட' எனச் சொல் வேறுபடாது பொருள் வேறுபட்ட சரூபம் வந்தவாறு காண்க. அஃது இஃது உஃது என்றுஞ் சுட்டுமுதலாகிய

வாய்தக்குற்றுகரமும், அது இது உது என்னும் முற்றுகரமும், பொருட்புணர்ச்சிக்கண் உயிரோடு புணருங்கால், அஃதழிந்து இஃதழிந்து உஃதழிந்து என நிற்கும். அஃது இஃது உஃது என்னுங் குற்றுகரமும், அது இது உது என்னு முற்றுகரமும், உருபு புணருங்கால் அன்சாரியை பெற்றும் ஆய்தங் கெட்டும் உருபேறியும் அதனை இதனை உதனை என நிற்கும். இவை பொருள் வேறு படாது சொல்வேறுபட்ட சரூபம். ஈண்டும் எடுத்தல் படுத்தல் கொள்க.

செம்பொன்பதின்பலம், குன்றேறுமா, குறும்பரம்பு. நாடியாது, எட்டியாது, எட்டு, கொட்டு, தாமரை இவை சொல்லும் பொருளும் வேறுபட்ட சரூபம். ஈண்டும் எடுத்தல் படுத்தல் கொள்க.

இவ்வாறு வரும் நாநார்த்தபதத் தொடரையெல்லாம் தொல்காப்பியர் இரட்டுறமொழிதலென்பர். அதுபற்றிப் பரிமேலழகரும் பெரியாரைப் பிழையாமை என்பதனை இரட்டுறமொழிதலென்பர். இக்கருத்தறியாத நச்சினார்க்கினியார் "ஒருபொரு ளிருசொற் பிரிவில வரையார்" என்னுஞ் சூத்திரத்தை இருபொருளொருசொற் பிரிவில வென நலிந்து பொருள்கொண்டு இச்சிலேடையுதாரணத்தைக் காட்டி யிடர்ப்படுவரென்க.

இனி நாநார்த்தபதத்தையெல்லாம் வர்ணவற்பாவமென்னும் எழுத்தொப்புமையுடைய பலபொரு ளொருசொல், பலசொல் லல்லது ஒருசொல் லன்றெனவும், ஒன்றல்லவை பலவென்பதனானும் பலவென்பதல்லது ஒருசொல்லன்றெனவும், இருசொல்லாதலின் இருகாலுரைக்கவெனவும், வடநூலார் கூறுவர். என்னை? பயஞ்சீரம் பயோம்புச [பயம்-பால், பயம்-நீர்] என அமரசிங்கத்துள் வருதலினென்க. அதுபற்றிச் சேனாவரையரும் "காலமுலகம்" என்னுஞ் சூத்திரத்துள் உலகமென்பதற்கு அவ்வாறுரைப்பர். தொல்காப்பியரும் "தெவ்வுக்கொளற்பொருட்டே" "தெவ்வுப்பகை யாகும்" எனவும், கண்ணென்பது ஏழாம்வேற்றுமையும் ஏழாம்வேற்றுமைப் பொருளுமாதலிற் "கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி" எனவும், "கண்கால் புறமகம்" எனவும், இரட்டித்துக் கூறுவர். அப்பதீக்ஷிதர் 'ஏகநாளாயலம்பிபலத்துவர்துவம்' போலவென்று திருட்டாந்தங்கூறி, ஒருகாலுரைக்கவே பலபொருளிற் பிரவிருத்திநிமித்தம் ஒருங்குதோன்றுமென்றுங் கூறுவர்.

"உப்ப காரமொன்றென மொழிப—இருவயி னிலையும் பொருட்டா கும்மே" என்புழி தபு என்னுஞ்சொற் செடுவென

வும் கெவலியெனவும் அந்தர்ப்பாவிதணிச்சென்பர் தொல்காப்பியராகலின், ஈண்டும் எடுத்தும் படுத்துஞ் சொல்லுக.

ஆடிக்குக் கொண்டான், சித்திரைக்குக் கொண்டான் என்புழி இக்குச்சாரியை முதலெழுத்தாகிய இகரங்கெட்டுப்புணர்ந்த இடப்பொருட்டுத் தொகைமொழியென்பர். அவை நான்கனுருபு தொடர்ந்த பொருளாகக் கொள்ளுங்காலும், எடுத்தும் படுத்துஞ் சொல்லுக.

ஐமுதலிய சிலவெழுத்துக்கள் விலங்கலாம்.

* கலிதலை ஈறுமீற்றயலுமாகவுடைய செய்யுளுறுப்பைச் சரிதகமென்பர். உருவகம் தீவகமென்பதுபோலச் சுவரிதகமென்பது சரிதகமென நின்றது. தமிழ்நூலுரைகாரர் சரிந்திறுதலிற் சரிதகமென்பது அறியாமை. (௧)

௪௧. பகுதிக் குரிய விகரணி யீரைந்தும் பாணிசெப்புந்
தொகுதிக் குரிய லகார மிடைநிலை தோயிறுதி [டாந்
விகுதிக் குரியலிங் லோட்டு வியங்கோள் விதிப்பொருட்
தகுதிக் குரிய கிருத்தியம் வேண்டுந் தகும்படுமே.

இது சிலவெழுத்திற்கும் சில பிரத்தியயத்திற்கும் சம்ஞையென்னுங்குறியீடு கூறுகின்றது. பகுதிப்பின்னிற்றற்குரிய எழுத்துக்கள் பத்துவகை விகரணியாம். வினைசெயன்மருங்கிற் காலமொடுவருவனவாகிய காலமுணர்த்தும் இடைநிலை தோயிறுதி நச லகாரமாம். அவற்றுள் வியங்கோள் லிங் எனவும் லோட்டு எனவும் இருவகையாம். வேண்டும் தகும் படும் என்னுமூன்றுங் கிருத்தியப் பிரத்தியயமாம். எ - று. பாணி காலம்.

'முதனிலைப் பின்னரு மிடைநிலை முன்னரு—மேவிய வெழுத்தே விகரணி யென்ப.' 'தவ்விய மிக்குத் தவ்விய மநீயமென்—றிவ்வகை மூன்றுங் கிருத்தியப் பிரத்தியயம்.' இவை உரைச்சூத்திரம்.

உ-ம். உண்ணப்படும், உண்ணாநின்றான், 'சொல்லுக சொல்லை,' 'வினைகலந்து வென்றீக,' 'தேமல ரங்கட் டிருவே புகுதக,' 'இன்பத்தின் பக்க மிரிக் கைதக்க,' 'அறைகுவன் சொல்லே,' கூடிப் பெறுகுவம் என விகரணி யெழுத்துக்களேழுவந்தன. ஒழிந்த மூன்றும் வந்தவழிக் காண்க. அராதி ஆதி என அதுக்காயும் துக்காயும் வந்தாற்போல, அறைகுவன் அறைவன் பெறுகுவம் பெறுவம் என வரும். உண்ணாநின்றான் உண்ணுவோம் என்புழி அதுக்

காயே வந்தது. உண்டாவென்பது அஸ்தி என்பதுபோல லுக் காயே வந்தது.

'அ ஆ உ ஊ என்னு நான் குயிருந்—தனைதரும் வென்னு முயிர் மெய்ம் மூன்றும்—விகரணி புயிர்சில மெய்யூர்ந்து வருமே—யேனை மூன்று மீண்டில வென்ப.' இஃதுரைச்சூத்திரம்.

நடநவொற்றுஇன் முதலாகிய காலங்காட்டும் இடைநிலை யோடு நீங்காத அன்னிறு முதலியவற்றை விரித்து லகாரமாதல் காண்க.

இனி வியங்கோளாவன வாழியர், வாழிய, வாழி, வாழ்க என ஆசீர்வாதம் என்னும் வாழ்த்தற்கண்ணும், 'பரந்து—கெடுக வுலகி யற்றி யான்,' 'பொற்பாவாய்—நீருய் கிலத்து விளியரோ' எனச் சாபத்தின்கண்ணும், 'தேமல ரங்கட் டிருவே புகுதக,' 'எந்தை வருக,' 'எம்மான் வருக' என வேண்டிக் கோடலாகிய பிரார்த்தனைக்கண்ணும் ஏவலாகிய பிரேரணைக்கண்ணும் வந்தன. 'கல் லையா னீன்கழலான் காப்பு,' 'குறித்தோன் கூற்றந் தெரிந்து மொழி கிளவி,' 'மறப்ப தறிவிலேன் கூற்றக்கலே,' 'நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்—குலத்தின்க ணையப்படல்,' 'இய ற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தல்' என விதிப்பொருட்டின் கண்ணும் வந்தன.

உயிரீறும் ஒற்றீறுமாய் வரும் இருவகைவியங்கோளையும் லிங் கென்றும் லோட்டென்றுங் கூறுக.

கிருத்தியம்போல லோட்டும் வடநூலார் விதிப்பொருட்டா மென்பர். அதுபற்றி லோட்டிற்குங் கிருத்தியத்திற்கும் ஈடுவே றுப கமாக விதிப்பொருட்டாம் என்றும்.

கிருத்தியவுதாரணம்:—'ஓதல் வேண்டு மொளிமாழ்குஞ் செ ய்வினை—யாஅது மென்னு மவர்,' 'இரந்தரந் தினைப்பதாக நீவினை க்க வேண்டுமே,' 'நீயென்குறை சொல்லவேண்டு மார்வல,' 'யான் பொருதல் வேண்டும்,' 'வெய்யோற் கசேக நான் வேண்டுமே,' 'இனைத்தென வறிந்த சினைமுதற் கிளவிக்கு—வினைப்படு தொகு தியி னும்மை வேண்டும்,' 'இன்னென வருஉம் வேற்றுமை புரு பிற்—கின்னென் சாரியை யின்மை வேண்டும்' என்புழிச் செய்யு மென்னு முற்றுகாமல் வேண்டு மென்னுந் தவ்வியப் பிரத்தியயம் வந்தது. 'நலம் வேண்டி னாணுடைமை வேண்டும்' என்னும் பாட் டின் பரிமேலழகரும் இதனை விதிப் பொருட்டென்றார்.

வடமொழியிற் கர்த்தவ்வியமென்பதற்குப் பொருள் செய்ய வேண்டும்.

இவ்வாலிக்காரியஞ் செய்யத்தகும், 'எய்திய செல்வத்த ராயினுங் கீழ்களைச்—செய்தொழிலாற் காணப் படும்.' 'கடைநிலத்தோ ராயினுங் கற்றுணர்ந் தோரைத்—தலைநிலத்து வைக்கப் படும்' கீழ்களை, கற்றுணர்ந்தோரை என இரண்டாம் வேற்றுமை விரித்து நின்றமை உயர்திணைப் பன்மை படுமென்பதனோடு முடிதலின், செய்யுமென்னும் முற்றிய ஆற்பசேபதமன்றி யாக்கிய கிருத்தன் விதிப்பொருட்டாகிய கிருத்திய மென்பது தெற்றெனவறிக.

இனி 'உள்ளப்படுகென' எனவருந் திருக்கோவையாருள் சொற் சோதனை காட்டிய 'வஞ்சனையஞ்சப்படும்' என்பதற்கு அஞ்சத்தகுமென்பர் பேராசிரியர்; பரிமேலழகர் அஞ்சவேண்டுமென்பராதலின், கிருத்தியப் பிரத்தியயமூன்றும் ஒன்றற்கொன்று பிரதிபதமாய் இருதிணையைம்பாலு மூவிடத்தினும் நிற்றலின், அசக்கிய கிருத்தாமென்க.

முற்கூறிய விகாரணியுள் பெறுகுவம், உண்டுகிடந்தான், உண்டுவிருந்தான், புகுதக, என்புழிப் பெறுவென்பது பகுதி, குவ்வென்பது விகாரணி, வம் என்பது காலங்காட்டும் லகாரமாகிய இடைநிலைதோய்விறுதி. உண் பகுதி, டு விகாரணி, கிடந்தான் இருந்தான் என்பன லகாரமென்னும் இடைநிலைதோய்விறுதி. புகு என்பது பகுதி, த என்பது விகாரணி, க என்பது லகாரமென்னும் இடைநிலைதோய்விறுதி. சொல்லு அருளு என்பதில் உ விகாரணி பெற்று நின்றாற்போல, பசு சகி தசு என விகாரணி பெற்று நிற்கும் முன்னிலை யேவல்வினைச்சொல். இவற்றுள் லகாரமென்னும் இடைநிலைதோய்விறுதி குன்றியது 'அபுமலச்தம்' என்னும் பாட்டினுட் காட்டுதும். 'கிருவுதல்' முதல் இதுவரை கிருதந்தமென்பர். (எ)

௭௨. அடைமொழி யாக்கொகை தத்திதன் காரக மாஞ்ச
டங்க, கடையயி லேவினை யெல்லாந் திகந்தாற் றுதுவினை,
புடையாக் ஆந்தனைச் சொற்பெயர் பாவமே யொதுவி
னிற்கு, மிடைநிலை யாருண்டில் வேறெச்ச மவ்யய மென்
றறியே.

இதுவுமது. தொகைமுதன் மூன்றுஞ் சப்தமாம். வினையெல்லாம் திகந்தமாம். முதனிலைத்தொழிற்பெயரும் உம்மையாற் புடைபாக்த தொழிற்பெயருமாகிய இவ் பாவமும் கிருத்பாவமும்

பாவபதமாம். திணைபாலிடமூன்றிற்கும் பொதுவாய் வருகின்ற இடைச்சொன் முதலாகிய அறுவகைச்சொல்லும் அவ்வியயமாம். எ - று.

'அடைமொழி' என்றவிதப்பால் பாவபதமுஞ் சுபந்தமாம். தன்னூலாரும் "வினையின்பெயரே" என்புழி வினைதன்னைச்சொல்லும் பெயரென்றார்.

முதனிலை புடைபரத்தலாவது 'சாமானியம்' என்னும் பாட்டெட்காட்டிய இக்முதலாகிய பாவபதப் பிரத்தியயங்களென்க.

பறவை, உவக்கை, துடைப்பம், கிடக்கை எனமுறையே கருத்தாவுங் கருமமுங் கரணமும் அதிகரணமுமாகிப் புடைபரத்த பாவபதம் வரும். புனைத்துறை, பெய்துறை, 'கெடுகோகவையாது,' 'அறிகொன்றறியான்' என்னும் முதனிலைகளும் உரைத்தல் கெடுதல் அறிதல் எனப் பொருள்விரித்து சொல்விரியாத நிங் பாவபதமாம்.

இடைச்சொல்லும் எச்சமுமல்லாத நான்கும் வினைக்குறிப்பாதலின், அவற்றைக் கம்மியமானக் கிரியையாய் நிற்கும் அவ்வியயமென்பர். இருதிணையைம்பான் மூவிடமாயடங்கிய லிங்கத்திரயமும் புருடத்திரயமும் வசனத்திரயமுமான மூன்றிற்கும் பொதுவாய் நிற்றலின், இடைச்சொன்முதலிய வாறனையும் அவ்வியயமென்பர்.

உயர்திணை முப்பாற்குமுரிய யாரென்னும் பிரச்சினபதம் 'வரைதகூட்டின்னு முதுபனி யாமத்தெங்- கோதைகூட் டின்னிய தான் யார்மன் -போதெல்லாந்—தாதேதாடு தாழ்ந்தாக் காரி வணாடன்—றூதேதாடு வாராத வண்டு.' எ-ம். 'காணுமோன் றுன் அமார் ஞானங்களார்' எ-ம். நீயார் எ-ம். இருதிணையைம்பான் மூவிடத்தும் வருதலானும், அவ்வியயமாயிற்று.

'மயில்கண் டன்ன மடநடை மகளிர்' எனவும் 'மயிலெனப் போந்து' எனவும் 'மணிமயிற் றொழில்' எனவும் திருமுருகாற்றுப் படையினும் திருக்கோவையாரினும் பரிபாட்டினும் முறையே மயிலை நடைக்குவமையாக்கலின், 'நடைமயிலே' என்றும்.

வடமொழியுதாரணம்:—கிம், அத்தி, நாத்தி, பிருதக்கு; இவை யார், உண்டு, இல்லை, வேறு என்பவற்றின் பிரதிபதம். பிரச்சினம், சற்பாவம், அபாவம், வியாகம் என்பன இந்நான்கிற்கும்பெயர். அமரசிங்கமென்னு நிகண்டில் மூன்றுங் காண்டத்துள் அவ்வியய-

'மிகுதி குறைவொப் பெனவருஉ மூன்றும்—உபய மபசயஞ் சமமெனலாகும்.' இஃதுரைச்சூத்திரம்.

'இலேச மிசையே லவமென மொழிப—வெருளக் கிரகண மென்பது மதுவே—குறையே சேடங் கூறுங் காலே' இஃதுரைச் சூத்திரம்.

ஆகாரவிறுதி யகாரவிறுதியியற்றே என்பது 'ஆகார விறுதி யகர வியற்றே' என்பதும், ஆதியதென்ப வயிமிதகர்த்தா வசயிமி தகர்த்தா என்பது அசயிமிதமென்பதும், செய்த செய்யின்ற செய்புமென்வாய்பாட்டில் என்பது பாட்டிலென்பதும், எடுத்துக்காட் டென்பது காட்டென்பதும், இல்வாழ்க்கை வழி வெஞ்சல் என்பது வாழ்க்கைவழி வெஞ்சலென்பதும், சீர்துக்கிச் செயல் என்பது துக்கிச்செயலென்பதும், சேடமாம். இவ்வாறுரைத்ததனாற் பிறிதோரிலக்கணமுங் கொள்ளுதல் உரைகாரர் மதமென்க. இலேசம் பெரும்பாலும் வருதலின் எழுதிக்காட்டல் வேண்டா வாயிற்று.

சந்தோபிசிதமுறை காரிகையும்போல இலக்கியவிலக்கணங்கள் ஒருங்கு தோன்ற மாதர்ச் சுவார்த்தமென்னும். உ-ம். 'மாதர்மலை மாட்சியான்' எ-ம். 'கனங்குழை மாதர்கொல்' எ-ம். 'குறியெதிர்ப்பை நீரதுடைத்து' எ-ம். 'வண்ணவண்டின்குரல் பண்ணை போன்றனவே' எ-ம். 'ரத்தம்போற் சேசே' எ-ம். 'சோதிவாயவுங் கண்ணவுஞ் சிவந்தன' எ-ம். நீலகம், மௌத்திகம், படகம் எ-ம். இருவகை மொழியினும் சாமானியதத்திதனில் வரும். கொளத்திரிபில வே என்பது போல வரற்பாலது திரிபிட மின்றே என்பதும் இரு பெயரொட் டென்பது இருவயிற் பெயரொட்டென்பதும் அவ்வியயதத்திதனில் வரும். பாவதத்திதனில் வருதல் 'முட்டாது கூறிய' என்னும் பாட்டினுட்காட்டினும்.

வழுவற்க வென்றலும் வழுவமைத்தலுமென வழுக்காத்தல் இருவகைப்படும். குறித்தபொருளை அதற்குரிய சொல்லாற் சொல்லுகவென்றல் வழுவற்கவென்றலாம். குறித்த பொருட்குரிய சொல்லன்றாயினும் ஒரானொன் அப்பொருளை விளக்குதலின் அமைக வென்றல் வழுவமைத்தலாம். அதனை வடநூலார் சிரங்குரக்கையவ: என்றுபோவர்.

ஆன்வொரேத்த காலமாவது மனேவிற்கும், யாவருமுரும், நீசுமேம் அன்றமின் நிழ்வல்லதில்லையென்பாரும், ஒருவர் படைகுர் தொழி நிலை ஒருகாலம் முன்சென்றொழிய ஒருகாலம் பின்செல்லுமாறு

வின் இறப்பு மெதிர்வுமாமென்பாரும், இவையெல்லாம் ஒருபொரு ளின் பண்புத் தொழிலுமல்லது காலமென்ற சொல்லுக்கு ஒருபொ ருட்பேறில்லை யென்பாரும் என ஆசிரியர் நால்வராதலின், அகத் தியர் "உலக வழக்க மொருமுக் காலமு—நிலைபெற வுணர்த்து முதுமறைநெறியால்" என வேதங்கூறிற்றென்பர். முன்பிறந்தான், பின்பிறந்தான், மூத்தான், இளையான் என்பனவற்றை உதாரணங் காட்டிக் காலமுண்டென்பாருமுளர். (க-௪0)

௪௫. வினைப்பெய ரோடல் வயமொக்கை யாதி யிடைக்கு நின்ற
தனைப்பெய ரிட்ட லுபசர்க்கஞ் சுட்டி னுட் டனகரத்
தினைப்பெய ரிட்டது தற்சத்தம யற்சத்தம் யாவெனா
முனைச்செயப்பாட்டு வினைபாவ கன்மணி மொய்த்தபக்கே.

இதுவுமது. வினைப்பெயரோடு கூடி நின்ற கை முதலாகிய அவ்வியயங்கள் உபசர்க்கமாம். வினைப்பெயரெனவே வினைச் சொல்லோடு வருதலுங்கொள்க. அகரச்சுட்டுமுதலாகிய சொற்கள் தற்சத்தமாம். யாவென்னும் வினாப்பெயரும் எகரமுதலாகிய வினாப்பெயரும் யற்சத்தமாம். செயப்பாட்டுவினை கர்மணிப்பிரயோக த்தின்கண்ணும் இவ் பாவப்பிரயோகத்தின்கண்ணும் வந்த யக் காம். எ - று.

அகரத்தையும் எகரத்தையும் சிலமொழியாய் நிறுத்தித் தொ ல்காப்பியர் முடித்தலின், அவ்விரண்டெழுத்தையும் ஆகுபெயராக வுங்கொள்க.

உ-ம். கைமிகல், 'கலத்தாரைக் கைவிடுதல்,' 'கையுறவேன்,' 'ஞாலங்கருதினுங் கைகூடும்' எனக் கையென்பது உபசர்க்கமாய் வினைப்பெயரோடும் வினைச்சொல்லோடும் வந்தது. 'நால்கால் யாத்த மாலை வெண் குடை' எ-ம். 'உயிரிற் றலைப் பிரிந்த ஞான்' எ-ம். 'கல்லாத மேற்கொண் டொழுகல்' மேற்கோள் எ-ம். 'மீக் கூறு மன்னனிலம்' எ-ம். 'ஒல்லை புணரப்படும்,' 'வல்லைக்கெடும்,' புறங்கொடுத்தல், புறந்தருதல், புறப்படல், அகப்படல், 'இலம்படு புலவர்' எனவும் உபசர்க்கம் வரும். கை, கால், தலை, மேல், மீ, ஒல்லை, வல்லை, புறம், அகம், இலம் என்பவை உபசர்க்கம். பரிமா றுதல் வடமொழி யுபசர்க்கம் பெற்ற தமிழ் வினைச்சொல்.

வடநூலார் உபசர்க்க மிருபதென்பர். அதிவேலம் அதிசயம் என்பன வடமொழியுபசர்க்கம். சிந்தாமணியாரும் 'அதிவேலமாக்

தர்' என்றார். அநிதுட்பம் என்பது வினைப்பெயரோடும் வினைச் சொல்லோடும் வாராமையின், அவ்வியயீபாவமென்க.

'எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்—மெய்ப்பொருள் காண்ப தறிவு' 'யாதனின் யாதனி னீங்கியா னோத—லதனி னதனி னிலன்' என்பன யச்சத்தம் வர்தபின் தச்சத்தம் வரும். இந்நியமம் வடநூலார் மதமாதலின், இருவள்ளுவரும் அவ்வாறு செய்யுட்செய்தாரென்க.

பாவ கர்மணியில் வருஞ் செயப்பாட்டு வினையை யக்கென்பர். அன்றியும் 'பொருத்தப்படும்,' 'மன்றபடும்,' 'சோர்வுபடும்' எனப் பெயரடுத்துவரும் படுவை யக்கு என்றும், இயற்றப்படுதல் வேறுபடுக்கப்படுதல் எனத் தொழிற்பெயரடுத்துவரும் படுவை ய என்றுங் கூறுவர். (சஎ)

சஅ ஆயுமலர்த்த மசர்த்த மலாதி பசாதியிவை
மாயுமெய் யீறுயி ரீறுயி ராதி மதிநுதலாய்
தோயுமெய் யாதி சமத்தம் வியத்தந் தொகைசிமேற்
றேயும் பிரேரணை செய்யா வெனல்செய் யெனக்குன்றுமே.

இது சிலசொற்குப் பெயரும் முன்னிலையொருமை வினைச்சொற் குன்றி நிற்பதுங் கூறுகின்றது. மெய்யீறு அலர்தம் எனவும், உயிரீறு அசர்தம் எனவும், மெய்ம்முதல் அலாதி எனவும், உயிர்முதல் அசாதி எனவும் பெயர்பெறும். தொகைப்பதம் சமத்தபதமெனவும், தொகாப்பதம் வியத்தபதமெனவும் பெயர்பெறும். செய்யாவென்பது செய்யெனக் குன்றும். எ - று.

'பிரேரணை யேவல் பேசுங் காலே' இஃதுரைச்சூத்திரம்.

உ-ம். ஆல் அலர்தமும் அசாதியுமாம். மணி அலாதியும் அசர்தமுமாம்.

சக்கரன் செல்வம், மன்னன் குமாரன், சங்கம் படகம், வட்டம் பலகை, கமலம் தாள் என்பன விரியென்னும் வியத்தபதம். அப்பதங்கள் சக்கரச்செல்வம், மன்னகுமாரன், சங்கபடகம், வட்டப்பலகை, கமலத்தாள் எனப் பிளவுபட்டிசையாது, ஒருசொல் நீர்மையவாய்ச் சமத்தபதமென்னுந் தொகையாய், சக்கரனது செல்வம், மன்னனுக்குக் குமாரன், சங்கமும் படகமும், வட்டமாகிய பலகை, கமலமொத்த தாள் எனப் பொருள்பட்டு நிற்கும். அவ்வாறல்லது அது கு என்னும் விபத்திகளும் உம்மைகளும் உவமவுருபுகளும் நின்றழியாவென்க.

'செல்லாமை யுண்டேல் எனக்குரை மற்றுநின் — வல்வரவு வாழ்வார்க் குரை.' என்புழி உரையாயென்பது உரையென நின்றது. வடநூலுள்ளும் பசி என்பது பச எனக் குறைந்து நின்று, பசி எனப் பொருள்படும். பஶ்யசி என்பனவுமது. வடநூலார் இவ்வாறுரைக்குங் கருத்தேபற்றித் தொல்காப்பியரும் "செய்யாவென்னு முன்னிலை வினைச்சொற் — செய்யென் கிளவி யாகிடனுடைத்தே" என்றார். இச்சூத்திரத்துக்கு வடநூலார் மதம்பற்றிச் சேனாவரையர் செய்யாவென்னும் முன்னிலையேவல் வினைச்சொல் செய்யெனக் குன்றுமென்றுரைப்பர். இனி நச்சினார்க்கினியார் செய்யாவென்னும் எதிர்மறைச்சொல் செய்யென்னும் உடன்பாட்டுச்சொல்லாமென்றும், அது குன்றினதன்றென்றுமுரைப்பர். செய்யீரென்பதும் அவ்வாறு பொருள்படுதலின், செய்யென்கிளவி யென்பதன்றியும் செய்யுமென்கிளவியாகிடனுடைத்தே என வேறொரு சூத்திரஞ் செய்யவேண்டும். 'மகவினை - மக்கட் பதடி யெனல்' என்பதும் உடன்பாடெதிர்மறையென்னும் இரண்டுவிதியும் பெறும். அதற்குஞ் சூத்திரம் வேறு வேண்டும். தொல்காப்பியர்க்கு எதிர்மறையும் உடம்பாடுமாய் நிற்குமென்பது கருத்தாயின், 'செய்யாவென்னு மெதிர்மறை வினைச்சொற் — செய்யவென்னு முடம்பா டாகும்' எனச் சூத்திரஞ் செய்வர். அவ்வாறு சூத்திரஞ் செய்யாமையானும், அஃதவரையன்மையறிக. இனி முதனிலைகளைத் தொல்காப்பியர் 'ஒற்றிறு தொழிற்பெய ருயிரிறு தொழிற்பெயர்' என்றதல்லது முன்னிலையேவல் வினைச்சொல்லென விதியாமையானும், அம்முதனிலைகள் பெயராய் நின்றே பின் மூன்றிடத்திற்கு முரிய இடைநிலைகளைச் சேர்த்து வினைச்சொல்லாவதன்றித் தனியேநின்று வினைச்சொல்லாகாமையானும், தனியேநின்று முன்னிலைவினைச்சொல்லாயிற்றென்றால், தனியேநின்று படர்க்கை வினைச்சொல்லாதலும் தன்மை வினைச்சொல்லாதலும் வேண்டும்; அவ்வாறாகாமையானும், நச்சினார்க்கினியாருரை வடநூலோடு மாறுபட்டதாமென்க. சாவவென்னெச்சத் திறுதி குன்றும் எனத் தொல்காப்பியர் முதலாயினோர் விதித்தோதிய உபலக்கணத்தால் 'பாலறிவந்த,' 'செய்தக்க,' 'மன்மாண் புனைபாவை யற்று' என வருவனவுமது. 'அண்மாணுழைபுலம்,' 'வரிப்புனைபந்து' என வருஞ் செய்தெனெச்சத் திறும் வினைத்தொகைகளாய்க் குன்றிய பெயரெச்சத்திறும் இவ்வாறே கொள்க. இவை விவட்சாதீனம். (௯)

௪௭. இன்பயஞ் சார்ந்தத் தம்பொரு ளின்றிச் சிலபதங்கள்,
அன்வயஞ் சம்பந்த தாற்பரி யத்தோ டநுபபத்திச்,
சொன்மயமாகத் தோன்றப் பொருள்வே றுணர்த்திற் றுடி
யிடையாய், தன்பயஞ் சார்ந்த விலக்கணை யாமென்பர்
தார்க்கிகரே.

இது பிறநூன்முடிந்தது தானுடம்பட்டிலக்கணை கூறுகின்றது. சில பதங்கள் தந்தம்பொருளையன்றி அன்வயமும் சம்பந்தமும் தாற்பரியமுமே பயனாக அம்மூன்றிலேனும் தனித்தனி அநுபபத்தியுந் தோன்ற வேறு பொருளை யறிவிக்குமாகலின் இலக்கணையாம். எ - று.

சொன்மயம் சொற்பொருள். உபபத்தியன்மை அநுபபத்தி. அதற்குப் பொருள் பொருத்த மின்மை.

இலக்கணையாவது, பெயராக வினையாக நிற்குஞ் சொற்கள் தந்தம்பொருளைபுணர்த்தாது, பொருளின்சம்பந்தப் பொருளையும் தாற்பரியப்பொருளையும் அறிவித்தல். சக்கியசம்பந்தத்தால் இலக்கணையென்றார் வடநூலார்.

உ-ம். 'சென்றதுகொல் போந்ததுகொல் செவ்வி பெறாதுளைபு—நின்றதுகொ னேர்மருங்கிற் கையூன்றி - முன்றின் - முழங்குங் கடாயானை மொய்ம்மலர்த்தார் மாறற்—குழந்தபின் சென்றவென் னெஞ்சு,' 'வைகல் பூங்கழி வாய்வந்து மேயுங் குருகினங்காள்—கைகள் கூப்பிச் சொல்லீர்' என்புழி நேர்மருங்கிற் கையூன்றி, கைகள்கூப்பிச்சொல்லீர் என்னும் பதங்கள் தந்தம்பொருளை புணர்த்தலுஞ் செய்யாது வேறுபொருளைபுணர்த்தலுஞ் சம்பந்தமும் தாற்பரியமுமின்றி, அப்பதங்கள் நெஞ்சோடுங் குருகோடும் அன்னுவயமே பயனாக நின்றன.

கங்கையிடைச்சேரி, புளித்தின்றான் என்றால் அவற்றுள் கங்கை புளி என்னும் பதங்கள் தந்தம்பொருள்மேலன்றி அப்பொருளின் சம்பந்தத்தால் கரை பழம் என்னும் பொருளை யறிவித்து நின்றன.

'வீதி புனங்கிழித் தருவச் சென்றான்,' 'நிலஞ்செறி னெடுந்த பாய்மா,' 'நீந்துமம்பு வேலான்,' 'பாயிருள் பருகிப் பகல்கான் றெழுதரு பரிதி,' 'கள்ளி வயிற்றி னகில்புகைக்கும்,' 'நாரிமேற் கண் பகைக்கும்' என்புழி உலாம், செறின், நம்பு, பருகி, கான்று, வயிற்றில், கண்பகைக்கும் என்னும் பதங்கள் தந்தஞ் சொற்பொருளின்

றித் தாற்பரியந்தோன்ற உள்ளதெக் கழித்து, வீதி சூழளார்க்க, நீச் செற விட்ட வேல், இருவிக்கி எறித்த எழும்பரிதி, வயிற்றிடத் தில், சேரிமேற்கிடக்கும் என வேறொருபொருளை யறிவித்து நின் றன. இவையெல்லாவற்றிற்கும் அநுபபத்தியாமே தோன்றுவன காண்க. இவ்வுதாரணங்களன்றி இவற்றிற்கெல்லாம் வேறே யுதா ரணங் காட்டுவாருமுளர். அவையும் இவையாலடங்கும் நுண்ண றிவினோர்க்கென்க.

அவயவமே பயனாக நின்றதனைப் பொருள்வேறுணர்த்து மவ ற்றோ டொருங்கு சிறந்தி முடிப்பது கூடுமோவெனின், "எச் சப் பெயர்வினை யெய்து மீற்றினும்" என்னுஞ் சூத்திரம்போலக் கடாவுரை காட்டி மறுக்கப் பட்டது.

இவ்விலக்கணங்கள் சத்தநூலிலக்கணமன்மையின், தொல் காப்பியர் பொருளியலுள் "நோவு மின்பமும்" என்னுஞ் சூத்திர த்துள் "உறுப்புடை யதுபோ லுணர்வுடை யதுபோல் - மறுத்து ரைப் பதுபோல்" எனச் செய்யாமரபிற் றொழிற்படுத்தடக்குவர். வடமொழியிற் காளிதாசனும மேகசந்தேசத்தினுள் இவ்வாறு கூறுதல் காண்க. இவ்விலக்கியங்களை இலக்கணமாகப் பிற்காலக் கவிகளும் 'முல்லையெனு - மென்மாலை தோளசைய மெல்ல நடந் ததே - புன்மாலை யந்திப் பொழுது' எனவும், 'வாள்வினை வாய்விட் டார்ப்ப' எனவும், 'கண்களே சொல்லும் வாய்திறந்தே' எனவுங் கூறுவர். (கஉ)

சஅ. மருளறு காரணங் காரியம் பெயரீறு வந்துறழு, மிரு
ளறு மொண்குணப் பேர்குணிப் பேர்வினை யொடிணையுயிர்,
பொருள்வினை மற்றோர் பொருளினுக தோன்றும் புலத்
தொடியார், தெருளுறு பண்பு புலனினை மாறியுஞ் சேர்ந்
திடுமே.

இதுவுமது. காரணப்பெயர் காரியப்பெயராகியும், காரியப்பெ யர் காரணப்பெயராகியும், மாறி வரும். குணம் குணியாயும், குண வினை குணிவினையாயும், வரும். ஒருபொருளின்றொழில் அதனோ டியைந்த பிறிதோர்பொருளோடும் வரும். இடத்துநிகழ்பொரு ளின்றொழில் இடத்தோடும் வரும். பண்பும் புலனும் மாறியும் வரும். எ - று.

புலம் இடம். புலன் விடயம்.

உ-ம். 'பிறப்பென்னும் பேதைமை' பிறப்பிற் கேதுவாகிய பேதைமை; இது காரியங் காரணமானது. 'தீவினை யென்னுஞ் செருக்கு' தீவினையால் வருஞ் செருக்கு; இது காரணங் காரியமானது. 'இல்லதெ னில்லவள் மாண்பானால்' மாண்புடையாளானால்; இது குணங் குணியானது. 'சிற்றின மஞ்சும் பெருமை' இது குணவினை குணிவினையானது. 'முன்னின்று பின்னோக்காச் சொல்' இது ஒருபொருளின் வினை மற்றோர் பொருளின் வினையானது. 'குளவளாக் கோடின்றி நீர்நிறைந் தற்று,' இத்தப்பாலை காளுழிய சிசி பொங்கும் இவை புலமென்னும் இடத்துநிகழ் பொருளின் றொழில் இடத்தின்மே னின்றன.

'பொருளினுந் தோன்றும்' என்ற சகாரத்தால் 'பீலிபெய் சாகாடு மச்சிறும்' என்னுஞ் சினைவினை முதல்வினையாதலுங் கொள்க.

இன்சொல், வன்சொல், மதுரகவி, 'செவிகைப்பச் சொற்பொறுக்கும்' என்னும் உபசாரங்களெல்லாம் பண்பு புலன் மாறி வந்தன. (௪௰)

௪௧. சாற்றிய தெய்வப் புலவோர் மொழிக்குந் தமிழ்மொழிக்
கும், வேற்றுமை கூறிற் றிணைபா லுணர்த்தும் வினை
விகுதி, மாற்றருந் தெய்வ மொழிக்கில்லை போக்கெழு
வாயுருபுந், தேற்றிய லிங்க மொருமூன்று மில்லை செழுந்
தமிழ்க்கே.

இது வடமொழிக்குந் தமிழ்மொழிக்கும் பேதங் கோடிகூறிட்டு ஒருகூறுண்டோ இன்றோவென்பது கூறுகின்றது. திணைபுணர்த்தும் வினைவிகுதியும், ஆண்பால் பெண்பாலுணர்த்தும் வினைவிகுதியும் வடமொழிக்கில்லை. தமிழ்மொழிக்குப் பிரதமாவிபத்தியும், இலிங்கத்திரயமுமில்லை. எ - று.

'சேதன னுயர்திணை யஃறிணை யசேதனம்.' இஃதுரைச் சூத்திரம்.

எற்புழிக்கோடலால் தமிழ்மொழிக்கும் அஃறிணைக்கண் ஆண்பால் பெண்பாலுணர்த்தும் வினைவிகுதியில்லையென்க.

"எழுவா யுருபு திரிபில் பெயரே" என்றதனுலே தமிழுக்குப் பிரதமாவிபத்தியில்லை யென்பது முன்னே கூறினும், பின்னுங்கூறியது, இலிங்கஞ் சிறுபான்மை கொண்டு பெரும்பான்மை விலக்கவேண்டிய அநுவாதத்தாலென்க.

‘ஒருமூன்றுமில்லை’ என்ற சகாரத்தால் மூன்றுமின்மை எச்சப்ப டுத்தி ஒருபொருட்கே தன்னை விசேடிக்கு மிடத்தும், குணங் கள் குணிகளை விசேடிக்குமிடத்தும், வடநூலார் மதம்பற்றி இலிங் கநியமம் ஏகதேசமாக வரும்.

உ-ம். சயநி என்றால் செயிப்பன், செயிப்பள், செயிக்கும், செயித்தது என ஓரீறே நின்று பொருளுணர்த்துமென்க.

‘நாணென்னு நல்லாள் புறங்கொடுக்கும் கள்ளென்னும்—பே ணாப் பெருங்குற்றத் தார்க்கு.’ என்னுந் திருவள்ளுவரில் பரிமேல ழகர் நாணென்னு நன்மை யெனற்பாலதனை நல்லாளெனப் பெ ண்பாலாகக் கூறியது வடமொழி முறைமைபற்றி யென்றாராத லின், வடமொழியுள் லச்சையென்பது பெண்பாற் சொல்லென்க.

இனிச் சிலப்பதிகாரத்திலே ‘தென்றலஞ் செல்வன் யாண்டு ளன் கொல்லோ’ ‘திங்களஞ் செல்வன் யாண்டுளன் கொல்லோ’ எ-ம். ‘இன்னிள வேனில் வந்தன ளாக’ எ-ம். பெயராலும் வினை யாலும் அவ்வவ சொற்களை ஆண்பாலாக்குவர். ‘பால்வாய்ப் பிறை ப்பிள்ளை யொக்கலைக் கொண்டு பகலிழந்த—மேல்பாற் றிசை ப்பெண் புலம்புறு மாலை’ எனப் பெண்பாலாக்குவர். சடகோபர் திருவிருத்தத்துள் ‘வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ் பாலை’ என்பது மது. ‘தோற்பையு ணின்று தொழிலறச் செய்தூட்டுங்—கூத்தன் புறப்பட்டக் கால்’ என்னும் நாலடியாருள் கூத்தன் உயி ர்க்கூத்தன். ‘கொங்கலர் கோதைக் குமரி மடநல்லாள்—மங்கலம் பாடி மலிவெய்தக் - கங்கையாள்—பூம்புன லாகஞ் செழீஇயினான் போரேறே தான்—வேம்பார் தெரியலம் வேந்து.’ இச்செய்யுளிற் கும ரியாற்றைக் கொங்கலர் கோதைக் குமரிமட நல்லாளென்றும், கங் கையாற்றை ஈறு திரித்துக் கங்கையாளென்றும் பெண்பாலாக்கு வர். இனிச் சிந்தாமணியுள் ‘ஆனைபு னரசன்ற னணிநிணர் வலமரு ப்பு’ என வருவதனையும் அதன்பாற் படுத்துக.

இனிப் “பல்லோர்க் குறித்த திணைநிலைக் கிளவி” என்னுஞ் சூத்திரத்துள் சேனாவரையர் அந்தணர் அரசர் என்னும் பன்மையீ ற்றுச் சாதிப்பெயரை உயர்திணைப் பெயரென்றும், அந்தணன் அரசனென்னு மொருமையீற்றுச் சாதிப்பெயரை விரவுப்பெயரெ ன்றுங் கூறினர். அதுவு மொக்கும். நாணென்னு நல்லாள், தென் றலஞ் செல்வன் முதலியனவெல்லாம் சாதிப்பெயரன்மையாலும், பரிமேலழகர் நாணென்னு நல்லாளென்பதனை உருவகமென்னாமை யாலும், விரவுப்பெயராகாது இலிங்கமென்னும் பாலுணர்த்துஞ் சொல்லேயாமென்க. நாணென்னும் படர்க்கை விரவுப்பெயரை

யும், நீ நீரென்னும் யுஷ்மச்சத்தமாகிய முன்னிலை விரவுப்பெயரையும், யான் யாமென்னும் அஸ்மச்சத்தமாகிய தன்மை விரவுப்பெயரையும் வடநூலார் சாமானியலிங்கமென்றும், இலிங்கத் தோன்றாதன வென்றும், இடைச்சொற்களையும் இலிங்கத் தோன்றாதன வென்றுங் கூறுவர். தென்றலஞ்செல்வன் முதலியனவெல்லாத் தன்னைத் தான் விசேடித்தன. பிற்காலக்கவிகளும் 'குழுமலர்முகத்துச் சொன்மாமகள்,' 'பொலம்புரி காஞ்சிப் புகழ்மகள்,' 'கொதித்து மேற்றிசை மனலத் தகப்பதம்,' 'உறுபகற் சிறவன்,' 'கங்கையான்கடற் றலைமகன்,' 'தனிப்பில் பெருங்கீர்த்தித் தையல்' எனத் தன்னைத்தான் விசேடிக்குமிடத்து அவ்வாறு கூறுவர்.

வடநூலார் கர்மதாரயனென்னும் பண்புத்தொகைக்குப் பண்பு வேறொருலிங்கமாக நின்றாலும் பண்புடைப்பொருள் எந்த லிங்கமாம் அந்தலிங்கமாக்கிப் புணர்த்துவாராதலின், அடையாக நின்ற குணலிங்கத்தை அநித்தியலிங்கமென்பர்.

உ-ம். கருஞ்சாத்தன், சாத்தி, சாத்தர், குதிரை, குதிரைகள் என்பனவற்றைப் பொருள் விரிக்குங்காற் கருவென்ற பண்பின் முதனிலையைக் கரியன், கரியள். கரியர், கரியது, கரியன என வீறு திரித்து வருமொழி எந்தலிங்கம் அந்தலிங்கமாக்கித் தொகுப்பரென்பதுபற்றித் தொல்காப்பியரும் "ஐம்பாலறியும் பண்பு தொகுமொழி" என்றும், குணச்சொற் குணமுடையதனை புணர்த்தலான் ஒன்றனையொன்று விசேடித்து இருசொல்லும் ஒருபொருளின்மேல் வருமிடத்து "இன்ன திதுவென வரூஉம்" என்றும் பண்புத்தொகைச் சூத்திரஞ்செய்தது நேரே காண்க. கரிய சாத்தன் எனச் சாமானியலிங்கமாகவும் விரிப்பர். இவையெல்லாம் குணங்கள் குணிகளை விசேடித்து நின்றன. இவ்வுரை சேனாவரையருரை.

கருங்குதிரை யென்பதனைக் கரிது குதிரை கரியது குதிரை என விரித்தால் எழுவாயும் பயனிலையுமாவதல்லது தொகையாகாதென்று மறுத்த நன்னூலார் கூறியவண்ணம் கருமை செம்மை யென்பனவற்றோடு புணர்த்ததன்றோவெனின், அவர் வாமனன் ஜினேந்திரன் செய்த சத்தநூல்பற்றி அவ்வாறு கூறுவர். 'வருத்தியின்றுள் மறர்தொழிற்றாள் வளர்த்தாள் சொற்கேட் டில்லடித் தாள்' எனக் குயில் காக்கைகளை நன்றது வளர்த்ததென்னுமதே, நன்றுள் வளர்த்தாளென உயர்திணைக் கிருதந்தமாக்கிப் பெண்பாலாக்குறுமது. இக்கருத்தறியாத நன்னூலுரைகாரர் இவற்றையெல்லாம் உருவகமென்பர்.

தக்கிணாமூர்த்தி என்புழி இருமொழியும் பெண்பாலாதலின், முக்கினது கெட்டெழுத்தானது. தக்கிணதேசம் என்புழித் தேசம் ஆண்பாலாகலின், நிலைமொழியீறு நெடில் குறிலாய் வருமொழிக் கேற்ப ஆண்பாலாய் அகரமானது; என்னை? விசேடியம் எந்தலிங்கமோ அந்தலிங்கமாம் விசேடணமுமானது. (௯௦)

௯௦. ஆக்கும் பிரதி பதத்துட னேயழி யா திருத்து
நோக்கும் படியச் சினைய வுதாரண நோக்கினைச் சேர்
தூக்கும் பொழுதறி தாவதொன் றில்லை சொல்லா தனவுங்
காக்குந் திறங்கண்டு காப்பது வேகடன் கற்றவர்க்கே.

இஃதிர்நூலு ளுரைத்துரையாதன மயங்காதுணருமாறும் அவையடக்கமென்னும் விசயமுங் கூறுகின்றது. நற்புறனடையுமாம். பிரதிபதமும் திருவசனமும் உதாரணமுஞ் சேர்த்துக்கிப்பார்க்குமனவில், அறிதாயறியற்பாலது எறிதாயினுமில்லையாம். இந்நூலுட் கூறாதனவற்றைக் கூறியதன்பாற் சார்த்தி உணர்த்தி அவற்றை வழுவாமற் பாதுகாத்தல் காவலர்க்கு முறைமை. எ - து.

பிரதிபதமாவது பரியாயபதங்கள் பலவற்றினுள் ஒன்றிரண்டு பிரசித்தபதமாக வருதலும், முழுதும் வருதலுமாம். என்னையோவெனின், அடி, கால்; நாசி, மூக்கு; காது, செவி; நெருப்பு, தீ; புடைவை, சேலை; என வருதலும், ஊழ், பால், முறை, தெய்வம், நியதி, உண்மை, பாக்கியம், பொறி, விதி என ஊழென்னுமதிகாரத்துட் காட்டினதுமாம்.

'திருவசன விருத்தியென விருவகை வசனமுஞ்—சொல்லின் முடிபு இலக்கணத் ததுவே.' இஃதுரைச்சூத்திரம்.

திருவசனம் அல்லது விருத்தி என்பதாவது, ஊழ்: அஃதாவது இருவினைப்பயன் செய்தவினையே சென்றடைதற்கேதுவாகிய நியதி என ஒருசொற்கு வாக்கியத்தொடராகப் பொருளுணர்த்துவதென்க. குடர்தமென்பதற்கு 'குடக்கன்மை கூப்பி மெய்கோட்டி நிற்றல்' எனச் சூத்திரமாகக் கிடப்பதுமது. இவ்வாறு மெய்ப்பாட்டியலுள்ளும் தண்டியலங்கார சூத்திரத்துள்ளும் ஒவ்வொரு சொற்களைப்பிரித்துப் பிரித்துக் கூறுவர்.

படியச்சு: அஃதாவது ஒருபொருளிருந்தவண்ணம் மயங்காது காட்டுதல். அவை எடுத்துக்காட்டு முதாரணம்.

இனிச் சொல்லாதனவற்றிற்கு உதாரணம்:—வேறு வேறு, ஒன்று ஒன்று, பத்துப்பத்து, பையப்பைய என்பன வெவ்வேறு,

ஒவ்வொன்று, பப்பத்து, பையய எனத் தொகைச்சொற்கள்போல நிற்கும். வடநூலாரும் ஏகமேகமென்பதனை ஏகைகம் என்பர்.

பிறிதினியைபுநீக்குதலை அன்னிய யோக வியவச்சேதமென்றும், இயைபின்மை நீக்குதலை அயோகவியவச்சேத மென்றுங் கூறுவர்.

(சாதியொருமையை சாத்தியேகவசனமென்பர். அஃதாவது ஒருசொல் ஒருமையீறு தோன்ற நின்றும் தோன்றாது நின்றும் பின்னொருமைப்பன்மை வினையீறுகள் மேல்வந்து முடிக்குஞ்சொற்களுமின்றித் தானே பன்மைப்பொருளுணர்த்துவது; 'ஈறு தோன்றிய சாதி யொருமையு--மீறு தோன்றாத சாதி யொருமையு--மென விரு திறப்படு மிருதிணை மருங்கினும்,' இஃதுரைச்சூத்திரம். உ-ம். 'சிலிகை - பொறுத்தானை ர்த்தா ளிவை' என வுயர்திணைக்கண் வரும். இதனைத் தொல்காப்பியத்துள் "மெய்ந்நிலை மயக்கி னாகுந வும்" என்பதனுலடக்குவர் நச்சினார்க்கினியரெனக. 'கவிமயாபிம் புதனொடுங் கலந்து நாடொறும் - புலிபுகழ் நேடுந்தோன் புரவி யெழுடைக்—குவிதலைத் தேர்கடாய்க் குணகு நின்றெழு—மவிர் கதிர் வானவ னமுகு மேயினுன்.' வடநூலார் உயர்திணையினுஞ் சாதியொருமை காட்டினரென்பதறியவேண்டி வடமொழி களன் காவியத்துள் இக்கவியைமாத்திரம் யாமொழிபெயர்த்தாம். இனி அஃறிணைக்கண்ணும் 'அஞ்சுவ தஞ்சாமை பேதைமை' எனத் திருவள்ளுவரினும், 'நாலெனப்படுவ தூவலுக்காலை' எனத் தொல்காப்பியத்தினும், ஈறு தோன்றிய சாதியொருமை வரும். 'தென்புலத்தார் தெய்வம்,' 'குணமென்னுங் குன்றேறி நின்றார்' என்புழிக் குணம் தெய்வம் என வீறுதோன்றாச சாதியொருமை வரும். அவற்றினுரையானுங் காண்க. 'கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு—நாவாயு மோடா நிலத்து,' 'வேலாண்முகத்த களிறு' என்புழிப் பன்மை வினைச்சொல்லேயன்றிப் பன்மைவினைக்குறிப்புப் பெயரோடும் முடிந்தன வாயினும், அவற்றின்கட் சாதியொருமையின்மை காண்க. 'எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்—கண்ணென்ப வாழு முயிர்க்கு,' 'கற்க கசடறக் கற்பவை கற்றபின்— னிற்க வதற்குத் தக' இவற்றையும் வடநூலார் சாதிப்பன்மையென்பர்.

இனி ஒருபொருளை முன்னரெடுத்துக் கூறுவது புரோவாதம். அதனை ஒருவிசித்ததாற் பின்னருமெடுத்துக் கூறுவது அநுவாதம். உ-ம். 'அறத்தினூஉங் - காக்க மெவனோ வுயிர்க்கு,' "அறத்தினூஉங் காக்கமு மில்லை' எனவரும். 'ஒருபெயர்ச் சொல்

னைச் சுப்பேறி நீக்கல்' என்பதும் "ஒற்றை பெயர்ப்பினு மற்றென மொழிப" என்டதும் அநுவாதத்தாற் புரோவாதங் கூறுமது சித்திக்கின்ற மாட்டேறும்.

விண்டதாமரை, 'விலங்கலைக் கால்விண்டு மேன்மேவிட' என்புழி விண்ட, விண்டு என்னுஞ் சொற்கள் சகன்மகமும் அகன்மகமுமாய் வரும்.

இனி அலங்காரநூலார் இசைபெசசத்தைதக காருவென்பர். அதற்கு உதாரணம்:—நமருள்ள லெம்மை மறைத்திரோ" என்பதாம். அது சொல்லுங்கால் முகவிகாரமாதல் சொல்விகாரமாதல் தோன்ற நிற்கும்.

'நசைப்பிற்கு - நல்ல படாஅ பறை' என விலக்கணையடியாய்த் தோன்றிய குறிப்பை இலக்கணாமூலத்தொனி என்பர்.

'குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே—யுடம்போ டுயிரிடை நட்பு' எனப் பெயரடியாய்த் தோன்றிய குறிப்பை அபிதாமூலத் தொனியென்றும், விருத்தலக்கணை யென்றுங் கூறுவர். அரக்கரைப் புண்ணியசன மென்பதுமது.

உடம்பொடு புணர்த்தலென்று முத்திரை சீபாதமென்பர். 'வரைதெரிவான் கட்டே புலகு,' 'பழமுதிர்சோலை மலைகிழ வோனே' என வரும்.

. சிறக்குந்துணைபுணரைத்த ஆசாரியாரோபமாவது புத்திபூர்வகமாகச் சிலையைத் தெய்வமாகக்கொண்டு வழிபடுதலும், பிறனொருவனைத் தந்தையாகக்கொண்டு சிராத்தம் புசிப்பித்தலும்போல்வது.

அதிகாரத்தால் வருவித்து முடிப்பதனை அநுஷங்கமென்றும், அவாய்நிலையால் வருவித்து முடிக்குஞ் சொல்லை அத்தியாகாரமென்றுங் கூறுவர்.

'சுடுமொழியுங் கைவிகந்த தண்டமும் வேந்த—னடுமுரண் டேய்க்கு மரம்.' என்புழி அரமென்னும் ஒருமைப் பெயரை வாக்கிய பேதமாகத் தனித்தனி கூட்டி முடிப்பதனைத் தேர்வடமிழுப்பார் போலப் பிரத்தியேகபக்ஷாக்ஷயமென்பர். இதுவுந் தாரக்ஷயத்து ளடக்கிக்கொள்க. பாணினியத்துள் 'ராஜப:' என்னுஞ் சூத்திரத்துள் பாடியகாரர் முதலாயினார் ரவ்விற்குக் காரப்பிரத்தியயத்தோடு இபவென்னும் பிரத்தியயமும் விகற்பமாய் வருமென்றும் வான்மீகி 'ரகாராதிகி' என்றுரைத்ததனை உதாரணங்காட்டி முடிப்பரென்க.

விகற்பம் உறழ்ச்சி; எய்தியதன்மேற் சிறப்பு விசேடம்; என்பன பரியாயம். அஃதறியாதார் உற்சர்க்கத்துக்கு அபவாத மென்று நிஷேத விதியாக மயக்கி வான்மீக மாரிடமென்பர்.

இனி அலங்காரநூலார் அபிதை, இலக்கணை, வியஞ்சனையிற் றிறமென மூன்றுவகையாக்குவர். அவர் மதம்பற்றிப் பரிமேலழகரும் ‘சொல்லின் - றொகை யறிந்த தூய்மை யவர்’ என்னுந் திருவள்ளுவர்குறளுள் செஞ்சொல், இலக்கணைச்சொல், குறிப்புச்சொல் லென்பர்.

எடுத்தோத்தினைச் சத்தநூலார் பிரதிபதோக்த மென்பர். போலியை அன்னியதாப் பிரதிபத்தி என்பர். மங்கலமென்பதோருருண்டு போலும் எனவரும் இசைத்தமாகிய ஒப்பில் போலியையும், அயங்கோராசாசித் தெனவரும் வடமொழியினும் வேண்டா வென்னுங் கருவென்பதனையும், வாக்கியாலங்கார மென்பர். பொதுவாயெய்திய விதியை உற்சர்க்கமென்றும், எய்தியது விலக்கிப் பிறிதுவருஞ் சிறப்புவிதியை அபவாதமென்றுங் கூறுவர். கொங்கரோதி யாது செய்தான் எனவரும் இது சன்மகமும் அகன்மகமுமாகி வினாவின் வரும்.

“பழையன கழிதலும் புதியன புகுதலும்—வழுவல கால வகையி னானே.” இச்சூத்திரம் பாணினி கூறியவாறு கூறினர். அது வடமொழியிற் காட்டுதும். வடநூலார் இரண்டெழுத்திற்கு ஒருகாரப்பிரத்யயங் கொடுத்துத் தலகாரமென்றாற்போல “ளனஃகான் முன்னர்” “லனஃகான் முன்னர்” என்பர் தொல்காப்பியர்.

இனிச் சாரவதியாற்று மேல்கரை கீழ்கரையாசிரியர் பறவையை வர்த்திகா வர்த்தகா என்பர்.

இந்நூலுட் சந்தேகந் தோன்றுவதனை மகாபாடியம், கையடம், சித்தாந்தகௌமுதி, சத்தகௌமுதி, வாக்கியபதீயம், அரிபீடிகை, நாதவிருத்தி, பதமஞ்சரி, சத்தகௌத்துவம் கற்றவரைக் கேட்க. காசிகாவிருத்தி, பிரக்கிரியா கௌமுதி என்னுமிரண்டினும் சித்தாந்தம் பிறவாதாதலின், அவை கற்றோரைக் கேளாதொழிக. வாக்கியபதீயம், அரிபீடிகை, வௌரிசேயம் முதலாயின வழங்குங்காலத்து அவ்வுரை நோக்கிச் சேனாவரையர் முதலாயினர் தொல்காப்பியத்திற் குரையெழுதினாரென்க. (௩௧)

௩௧. சீதள சந்த்ர முசராம பத்திர தீக்ஷிதர்க்குப்
போதொருசென் றுபுகல்வோமவர்க்கும்பொழு தில்லையேன்
மேதினி யிற்றமிழ் செய்பிர போத விவேகத்தன்னைப்
பேதமிலாத பதஞ்சலிபாற் சென்று பேசுவமே.

இங்குப்படலம் முடிந்தது.

---

## பிரபோதவிவேகவுரை முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

பேர்கொண்டு நின்றபிர போத விவேகத்தைச்
சீர்கொண்ட ராமபத்திர தீக்ஷிதன்ற—னேர்கொண்டு
கேட்டா னினிக்கண்ணாற் கேட்கும் பதஞ்சலிதான்
கேட்டாலென் கேளாக்கா லென்.

உம்பர்க் குரியபிர போத விவேகத்தை
யைப்பத் தொருகவிதையா லுரைத்தான்—செம்பொற்சீர்
பன்னு மதிற்குருகூர் வாழ்சுப் பிரமணிய
னென்னு மொருவே தியன்.

---

## சோதநபத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௨ | ௨௪ | வழக்குபோல | வழக்குப்போல |
| ௨௧ | ௨௨ | வந்தது | வந்தன |
| ௨௨ | ௧௧ | மேவொடு | மேயொடு |
| ௨௯ | ௧௫ | மெழுத்துசொற் | மெழுத்துச்சொற் |
| ௪௨ | ௪ | உயர்திணைபன்மை | உயர்திணைப்பன்மை |